# நிர்வாணஷட்கம்

(விளக்கு அணைக்கப்படுவதுபோல ஜீவபாவம் அறவே அழிக்கப்பட்ட விடுதலை நிலையே ‘நிர்வாணம்’ எனப்படும். அதைக் குறித்து ஆறு ச்லோகங்கள் கொண்டது இப் ப்ரகிரணம்.)

**மனோபு$^{3}$த்$^{3}$த்$^{4}$யஹங்கார சித்தானி நாஹம்**
**ந கர்ணம் ந ஜிஹ்வா ந ச க்$^{4}$ராண நேத்ரே ।**
**ந ச வ்யோம பூ$^{4}$மிர் ந தேஜோ ந வாயு:**
**சிதா$^{3}$நந்த$^{3}$ரூப: சிவோ(அ)ஹம் சிவோ(அ)ஹம் ॥** 1

நான் மனஸ், புத்தி, அஹங்காரம், சித்தம் என்பவைகள் அல்ல; காதும் அல்ல, நாக்கும் அல்ல, மூக்கும் அல்ல, கண்ணும் அல்ல. (நான்) ஆகாசமும் அல்ல, பூமியும் அல்ல, தேஜஸ்ஸும் அல்ல, வாயுவும் அல்ல. ஞானத்தையும் ஆனந்தத்தையும் ஸ்வரூபமாயுடைய சிவமே (மங்கள ரூபியான பரமாத்மாவே) நான்.

**ந ச ப்ராண ஸம்ஜ்ஞோ நவை பஞ்ச வாயுர் -**
**நவா ஸப்த தா$^{4}$துர் நவா பஞ்ச கோச: ।**
**ந வாக் பாணி பாதௌ$^{3}$ ந சோபஸ்த பாயூ**
**சிதா$^{3}$நந்த$^{4}$ரூப: சிவோ(அ)ஹம் சிவோ(அ)ஹம் ॥** 2

நான் பிராணன் என்ற பெயருள்ளதும் அல்ல, ஐந்துவித வாயுவும் அல்ல, ஏழுவித தாதுக்களும் அல்ல, ஐந்து கோசங்களும் அல்ல, வாக்கு அல்ல, கையும் காலும் அல்ல, கருக்குழி, எருக்குழிகளும் அல்ல. ஞானானந்த ஸ்வரூபனான சிவமே நான், சிவமே நான்.

**ந மே த்$^{3}$வேஷ ராகௌ$^{3}$ ந மே லோப$^{4}$மோஹௌ**
**மதோ$^{3}$ நைவ மே நைவ மாத்ஸர்ய பா$^{4}$வ: ।**
**ந த$^{4}$ர்மோ ந சார்தோ$^{2}$ ந காமோ ந மோக்ஷ:**
**சிதா$^{3}$நந்த$^{3}$ரூப. சிவோ(அ)ஹம் சிவோ(அ)ஹம் ॥** 3

எனக்கு வெறுப்பும் - விருப்பமும் கிடையாது. எனக்கு பேராசையும் - மதி மயக்கமும் கிடையாது. எனக்கு இறுமாப்பு கிடையவே கிடையாது. பொறாமையும் கிடையவே கிடையாது. தர்மமும், அர்த்தமும், காமமும் மோக்ஷமும் எதுவும் (எனக்குக்) கிடையாது. ஞானானந்த ரூபியான சிவமே நான், சிவமே நான்.

**ந புண்யம் ந பாபம் ந ஸௌக்$^{2}$யம் ந து:$^{3}$கம்**
**ந மந்த்ரோ ந தீர்த$^{2}$ம் ந வேதா$^{3}$ ந யஜ்ஞா: ।**
**அஹம் போ$^{4}$ஜனம் நைவ போ$^{4}$ஜ்யம் ந போ$^{4}$க்தா**
**சிதா$^{3}$நந்த$^{3}$ரூப: சிவோ(அ)ஹம் சிவோ(அ)ஹம் ॥** 4

(எனக்குப்) புண்ணியம் கிடையாது, பாபம் கிடையாது, சுகம் கிடையாது, துக்கம் கிடையாது, மந்திரம் (ஜபம் முதலானது) கிடையாது. வேதங்கள் (வேதாத்யயனம்) கிடையாது. யக்ஞங்கள் (வைதிக யாகாதி கர்மானுஷ்டானம்) கிடையாது. நான் போகப்பொருள் இல்லவே இல்லை. போகமாக அனுபவிக்கப் படுபவனும் இல்லை, போகம் அனுபவிக்கிறவனும் இல்லை. ஞானானந்த ஸ்வரூபரான சிவமே நான், சிவமே நான்.

**ந ம்ருத்யுர் ந சங்கா ந மே ஜாதி பே4த:**
**பிதா நைவ மே நைவ மாதா ச ஜன்ம ।**
**ந ப3ந்து4ர் ந மித்ரம் கு3ருர் நைவ சிஷ்ய:**
**சிதா3நந்த3ரூப: சிவோ(அ)ஹம் சிவோ(அ)ஹம் ॥** 5

எனக்கு மரணம் கிடையாது, ஸந்தேஹம் கிடையாது, ஜாதி வேற்றுமை கிடையாது. தந்தையும் - தாயும் கிடையவே கிடையாது. பிறவியும் கிடையாது, உறவின ரும் கிடையாது, ஸ்நேகிதன் கிடையாது. குரு கிடையாது, சிஷ்யனும் கிடையவே கிடையாது. ஞானானந்த ஸ்வரூபியான சிவமே நான், சிவமே நான்.

**அஹம் நிர்விகல்போ நிராகார ரூபோ**
**விபு4த்வாச்ச ஸர்வத்ர ஸர்வேந்த்3ரியாணாம் ।**
**ந சாஸங்க3தம் நைவ முக்திர் ந ப3ந்த4:**
**சிதா3நந்த3ரூப: சிவோ(அ)ஹம் சிவோ(அ)ஹம் ॥** 6

நான் நிர்விகல்பன் (வேறாக எதுவுமில்லாதவன்) எல்லா பதார்த்தங்களிலும் வியாபித்திருப்பதினாலேயே (நான் தனியொரு) உருவமற்றவன். எல்லா இந்திரியங் களுடன் (வாஸ்தவத்தில் ஸம்பந்தப்படாமல் இருந்தபோதிலும்) சேராமலிருக்கும் வஸ்துவும் இல்லை, (எனக்கு) மோக்ஷ மென்பது கிடையாது. பந்தமென்பதும் கிடையாது. ஞானானந்த ஸ்வரூபியான சிவமே நான், சிவமே நான்.

